## 50

# சோகத்தின் முன்னிலையில்

'அப்பா, உங்களுக்கு என்னை அப்படிக் கேட்கக் கூட மனம் வருகிறதா?' என்று சாவித்திரி பல பல வென்று கண்ணீர் உதிர்த்துக் கொண்டே கேட்டாள்.

'சாவித்திரி, நீ சிறு குழந்தையல்ல. நடந்தது நடந்து விட்டது. இனிமேல் என்ன செய்வது? இருக்கிற வரையில் நீ சோற்றுக்குத் திண்டாடாமல் இருக்க வேண்டாமா?'என்று அவளுடைய தகப்பனார் கெஞ்சுதலாகச் சொன்னார்.

'அப்பா, உங்களுக்கு என்னை வைத்துக் காப்பாற்றச் சக்தியில்லையென்றா சொல்லுகிறீர்கள்?' என்று அவள் நெஞ்சு உடைந்தது போன்ற வேதனையுடன் கேட்டாள்.

அந்த வார்த்தை அவருடைய இருதயத்தில் அம்புபோல் பாய்ந்தது. ஆனால் அவர் தம் வருத்தத்தை வெளிக்காட்டவில்லை:

'இல்லையம்மா, இல்லை. உன்னைவிட எனக்கு எது மேல்? ஆனால் உன்னுடையது என்று, நீ சுதந்திரத்துடன் கையாள, ஏதாவது இருக்க வேண்டாமா?' என்று அவர் மறுபடியும் கேட்டார்.

'என்னுடையதென்று நான் சொல்லிக் கொள்ள வேண்டியது இனிமேல் வாழ்க்கையில் என்ன இருக்கிறது? என்னை ஏன் இன்னும் புண்படுத்துகிறீர்கள்? எனக்கு என்ன சுதந்திரம் வேண்டியிருக்கிறது, வாழ்க்கையின் கைதியான பிறகு?' என்று சாவித்திரி துக்கமும் ஆத்திரமும் கலந்த குரலில் சொன்னாள்.

'என்ன இப்படிப் பேசுகிறாய்? அவர்கள் ஏன் கொடுக்கக் கூடாது? ஏராளமான சொத்தாச்சே. நீ எதற்காகக் கஷ்டப்படவேண்டும்?'

'என்ன கஷ்டம்? இனிமேலா கஷ்டப்படப் போகிறேன்? அப்பா, நீங்கள் கூடவா இப்படிப் பேசுகிறீர்கள்?' என்று தகப்பனாரைக் கடிந்து கொண்டாள் சாவித்திரி.

*பாரததேவி, 17.09.1939*

'எவ்வளவு துக்கத்துடன் நான் இதை உன்னிடம் சொல்லுகிறேன், தெரியுமா?'

'எதற்காகச் சொல்லுகிறீர்கள்?'

'எவ்வளவு நாள் சும்மா இருப்பது, சொல்லாமல்?'

'சொல்லவே வேண்டாமே!'

'பிராது போடத் தாமதம் ஆகக்கூடாது. இதெல்லாம் உன்னிடம் சொல்லி உன் மனத்தைச் சிரமப் படுத்த வேண்டாமென்று தான் உன் கையெழுத்து மட்டும் வேண்டுமென்றேன். இத்தனை நாள் நான் ஏதாவது வாயைத் திறந்தேனா? இனிமேல் சாவகாசமில்லை, அம்மா!' என்று சொல்லி நாகரத்தினம் ஐயர் நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தவர் எழுந்த உட்கார்ந்தார்.

சாவித்திரி ஜன்னலில் உட்கார்ந்து கொண்டு, வெளியே தெருவைக் கவனித்துக் கொண்டிருந்தவள் போல முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டிருந்தாள். தகப்பனாரைப் பார்த்தால் உடனே தன்னை மறந்து அழுகை வந்துவிடுமோ என்று பயந்து தான் அப்படி இருந்தாள்.

'அப்பா, அந்தப் பேச்சை இனிமேல் எடுக்காதீர்கள்!' என்று கடைசி யில் கண்டிப்பாகச் சொன்னாள்.

'என்ன, சாவித்திரி? எதற்காக இப்படிப் பிடிவாதம் செய்கிறாய்?' என்று அவர் சொன்ன குரலில் அவர் அறியாமல் என்ன மாறுதல் ஏற்பட்டதோ, சாவித்திரி சட்டென்று திரும்பி அவர் முகத்தைப் பார்த்தாள். அவர் லேசாக வருத்தமும் மனஸ்தாபமும் கொண்டிருந்தது தெரிந்தது.

'அப்பா, நீங்கள் வேண்டுமானால் என்னை வைத்துக் காப்பாற்ற வேண்டாம்; அவர்கள் காசு எனக்கு வேண்டாம். அவர் இருக்கிற பொழுது அவருக்கும் எனக்கும் உபயோகப்படாத காசு எனக்கு இப்போது தேவையில்லை' என்று அவள் தடதடவென்று பேசினாள்.

அந்தப் பேச்சிலிருந்த காரத்தை உணராதவர் போல மறுபடியும், 'நாய் விற்ற காசு குரைக்குமா?' என்றார் அவர்.

சாவித்திரிக்குக் கோபம் தாங்கவில்லை. ஆனால் அந்தக் கோபத்துடன் தகப்பனாருக்குப் பதில் சொல்வதற்குப் பயப்பட்டாள். ஏதாவது துடுக்கான வார்த்தை வெளிவந்து விடுமென்று பெருமுயற்சி செய்து சும்மா இருந்தாள்.

சாவித்திரியின் புருஷன், சாம்பு, இறந்த நாள் முதல் நாகரத்தினமையர் அந்த ஜீவனாம்சப் பேச்சை எடுத்த போதெல்லாம் சாவித்திரி அழுது அழுது அவரை அடக்கிவிட்டாள். இருதயம் வெடித்து விடும் போல் அவள் நிலைகுலைந்த காட்சியைப் பார்க்கச் சகிக்காமல் அவர் சும்மா இருந்து விடுவார். சாம்பு இறந்து மூன்று வருஷங்கள் ஆகப் போகின்றமையால் ஒரு வேளை பெண்ணின் மனப்புண் கொஞ்சம்

ஆறியிருக்கும் என்று எண்ணினார் அவர். அதற்கேற்றாப்போல் சாவித்திரியும் முன்போல உள்ளே அடைத்துக்கொண்டு கிடக்காமல் வீட்டுக் காரியம் செய்வதும் படிப்பதுமாக இருந்தாள். சில சமயங்களில் கொஞ்சம் குதூகலமாகவும் வேடிக்கையாகவும் கூட அவள் இருந்ததாக அவருக்குப்பட்டது. அதைக் கண்டு அவர் பரம சந்தோஷம் அடைந்தார். அந்த மட்டிலுமாவது தன் 'குழந்தை' துக்கத்தை மறந்து இருக்கிறாளே என்று ஒருவிதமான நிம்மதிகூட அடைந்தார்.

ஆனால் அவ்வளவு குதூகலமும் வேடிக்கையும் அவள் கொண்டது வெளிக்கு என்பது அவருக்கு எப்படித் தெரியும்? எப்போதும் அழுது கொண்டு வீட்டில் இருப்பவர்களைத் துன்புறுத்தக் கூடாது என்று தான் அவள் அந்த மாதிரி நடந்து கொண்டாள். மேலும் அந்தத் துக்கம் அவளைச் சோர்வடையச் செய்து விட்டது. அழுது அழுது அவள் கண்களில் கண்ணீர் ஊற்று அற்றுப் போயிற்று. பொங்கிப் பொங்கி அவளுடைய இருதயத்தின் துக்கம் ஒருவாறு அடங்கிவிட்டது. சரீரம் பலஹீன மடைந்ததால் உணர்ச்சிகளும் பலக்குறைவு அடைந்தன. அழக்கூடத் திறமையற்றுப் போனாள். மறுபடியும் கொஞ்சம் சிரித்துக் கொண்டு திரிந்தால் பிறகு அழலாமோ எண்ணினாள். துக்கத்தின் எல்லையைக் கண்டு விட்டாள். மேலே ஒன்று அவளுக்கு ஒருவிதத் திடமும் அமைதியும் கூட ஏற்பட ஆரம்பித்தன. கொதிப்பு ஏறினால் பால் பொங்குவது போல் தகப்பனார் பேச்செடுத்த போதெல்லாம் அவள் உள்ளம் குபீலென்று குமுறியது. அது அவளுடைய தகப்பனாருக்கு அர்த்தமாக வில்லை.

நாகரத்தினமையருடைய உயிர் பெண்ணின் மேல் இருந்தது. மூத்த சம்ஸாரத்தின் பெண் அவள். தமக்குப்பின் அவள் திக்கற்றுப் போகக் கூடாதே என்றுதான் அவர் ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்தார்.

சாவித்திரியின் மாமனார் நல்ல சொத்துக்காரர். அவரும் இரண்டாம் தாரம் கொண்டவர். சாம்பு முதல் தாரத்து மகன். அவன் காலேஜில் படிக்கும் போதே தகப்பனாருடன் சண்டை போட்டுக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி விட்டான்; அதாவது சிறிய தாய்க்கும் அவனுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. தகப்பனார் அவள் வார்த்தையை நம்பித் தன்னைக் கடிந்தது அவனுக்குத் தாங்கவில்லை. பிறகு அவன் தகப்பானார் முகத்தைப் பார்க்கவில்லை.

தனக்குரிய சொத்தின் பாகத்தை வியாஜ்ஜிய மூலம் பெறும்படிப் பலர் தூண்டியும் அவன் கேட்க வில்லை. விஷக்காசு தனக்கு வேண்டா மென்று சொல்லி விட்டான். சாவித்திரி அந்தத் துணிவில் அவனை முழு மனசுடன் ஆதரித்தாள். ஆனால் நாகரத்தினமையருக்கு மாப்பிள்ளை யின் போக்குப் பிடிக்கவில்லை. அவர் மாப்பிள்ளைக்குக் கொஞ்சம்

காரமாகவே கடிதங்கள் எழுதினார். அது சாவித்திரிக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை.

சாவித்திரி பிறவியாலும் படிப்பினாலும் மிகுந்த 'ரோஷ'மும் மானமும் கொண்ட பெண்ணாக இருந்தாள். சாதாரணமாக அவளுடைய வயசுப் பெண்களிடம் தென்படாத ஒரு விசால நோக்கம் கௌரவ புத்தியும் அவளுக்கு இருந்தன. எனவே புருஷன் போக்கு முழுவதும் அவளுக்கு நன்றாக அர்த்தமாயிற்று. அதற்காக அவனை மிகவும் போற்றினாள். அந்தப் பணம் இல்லாததால் அடைந்த துன்பங்களைப் பொருட்படுத்தாமலே வாழ்க்கை கவலையின்றிக் கழிய அவனுக்கு உதவியாக இருந்தாள்.

சாம்புவும் சாவித்திரியும் ஆதிமுதல் வாழ்க்கையில் மிகவும் கஷ்டப் பட்டார்கள். என்றாலும் இருவரிடையே இருந்த பாசம் மட்டும் அந்தக் கஷ்டங்களால் இறுகத்தான் செய்தது. பணக்கஷ்டம் மட்டுமல்ல, அவர்கள் பட்டது. இரண்டு குழந்தைகள் பிறந்து கொஞ்ச காலம் வளர்ந்து இறந்தன. அந்தத் துக்கம் அவர்களுடைய குணத்தைப் பதமாக் கிற்று; ஆனால் அவர்கள் பொறுமையை இழக்கவில்லை. எங்கோ ஒரு சில்லறை ஸ்டேஷன் மாஸ்டர் உத்தியோகத்திலிருந்து வந்த சிறு சம்பளத்தை வைத்துக் கொண்டு இருவரும் காலம் தள்ளி வந்தார்கள்.

சாம்பு திடீரென்று ஏதோ ஒரு விஷக்காய்ச்சலால் இறந்ததுதான் சாவித்திரிக்குத் தாங்கமுடியாத துக்கமாக வந்தது. உயிர்வைத்துக் கொண்டு இருப்பதற்குத் தனக்கிருந்த அந்த ஆறுதலும் போய் விட்டதால் ஊன்றுகோல் இல்லாத கொடிபோல் அலைந்தது அவள் உள்ளம். தகப்பனார் வீட்டில் அவள் முள்ளின்மேல் இருப்பதுபோல இருந்தாள். அவருடைய அன்பும் ஆதரவுமே அவளுக்குச் சகிக்க முடியாத கஷ்டமாக இருந்தன. கணவன் இறந்த துக்கம் ஒரு புறமிருக்க வேறு பல துக்கங்கள் அவளைச் சூழ்ந்து கொண்டன.

'அப்பா, அவர் இறந்த துக்கத்தை நான் மறந்து விட்டேன். இப்போது எனக்கு, நான் இருப்பது தான் துக்கமாக இருக்கிறது' என்று சாவித்திரி நெடுநேரம் கழித்து மறுபடியும் பேசலானாள்.

'சாவித்திரி, நீ புத்திசாலி. நான் என்ன சொல்லப் போகிறேன்? ஏதோ நேர்ந்து விட்டது விபரீதம். இனிமேல் நாம் என்ன செய்கிறது? உயிர் இருக்கிற வரையிலும் நீ உபத்திரவமில்லாமல் இருக்க வேண்டாமா?'

'நீங்கள் தான் என்னை உபத்திரவம் செய்கிறீர்கள்!' என்று சாவித்திரி சட்டென்று குறுக்கிட்டுச் சொன்னாள்,

'உன்மேல் பிசகில்லை, சாவித்திரி! நான் என்ன செய்யப்போனாலும் எல்லோருக்கும் அப்படித் தான் படுகிறது' என்று அவர் கொஞ்சம் கசந்துகொண்டு சொன்னார்.

'அதற்காகத்தான் ஒன்றும் செய்ய வேண்டாம் என்றேன் அப்பா.

உலகம் நன்றி கெட்டது.'

'நன்றியைப்பற்றி நான் கவலைப்படவில்லை; என் கடமையை நான் செய்து முடித்துவிட வேண்டியது என்பதுதான் என் எண்ணம்.'

'உங்கள் கடமை எனக்கு இழிவையோ துன்பத்தையோ கொடுக்கு மானால்?'

'உனக்குச் சேரவேண்டிய பணத்தை நீ பெறுவதில் உனக்கு என்ன இழிவு?'

'என் புருஷருக்குச் சேரவேண்டிய பணம் அவருக்கே உபயோகப் படவில்லை. அது எனக்கு வேண்டாம். அதை நான் பெற்றுக் கொண்டால் அவருக்குத் துரோகம் செய்தவளாவேன்; கூடாது; மாட்டேன்!'

'உனக்கு ஏற்பட்டிருக்கும் மகத்தான துக்கத்தில் உனக்கு அப்படித் தான் தோன்றும். அதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. ஆனால் நான் உன் சார்பாக அந்தப் பணத்தை வாங்கித்தான் ஆகவேண்டும் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள்.'

'என் மனசிலிருப்பது அவர்களுக்கு என்ன தெரியும்?'

'நல்லதைத்தானே சொல்லுகிறார்கள்?'

'அப்பா, எனக்கு ஒன்றும் வேண்டாம். உங்களுக்குச் சௌகரிய மிருந்தால் ஒரு வேளைச் சோறு போடுங்கள்; இரண்டு துணி வாங்கிக் கொண்டுங்கள். இல்லாவிட்டால்....'

'சாவித்திரி, நீ இந்த மாதிரிப் பேசி என் மனத்தையும் புண்படுத்து கிறாய்' என்று நாகரத்தினமையார் தம்மையும் மறந்து கோபமாகச் சொல்லிவிட்டார்.

'ஆமாம், அதுதான் உங்களுக்குத் தெரியும்; என் மனசு படும் அவஸ்தை உங்களுக்கு எப்படித் தெரியும்? தெரிந்திருந்தால் இந்த மாதிரி என்னை நீங்கள் கேட்கவே மாட்டீர்கள்!' என்று சாவித்திரி கொட்டிவிட்டாள்.

சாவித்திரி சொன்ன வார்த்தைகள் அவளுடைய தகப்பனாரை உலுக்கி எடுத்து விட்டன. இது வரையில் அவர் தம் துக்கத்தை அடக்கிக் கொண்டு பேசினார். அதற்கு மேல் அவரால் அடக்க முடியவில்லை. கண்களில் ஜலம் பெருகிற்று. உரக்க அழ ஆரம்பித்தார். இரவும் பகலுமாகத் தாம் கண்ணெதிரில் காணும் அந்தச் சோகக் காட்சியைக் கண்டு கண்டு புண்பட்டுப் போன இருதயத்தின் உணர்ச்சி கட்டு மீறிப் போய்விட்டது. சாவித்திரியின் வாழ்க்கை சீர்குலைந்த தினம் முதல் அவர் ஏக்கம் பிடித்துப்போய்த் திரிந்தார். எல்லாவற்றிலும் அவருக்கு வெறுப்பு ஏற்பட்டது. சாப்பிட முடியவில்லை; அவரால் நிம்மதியாகப் பேச முடியவில்லை; கலகலவென்று சிரிக்க முடியவில்லை. மறைந்து கிடந்த அந்தப் பெருந் துக்கத்தின்மேல் அந்த அடி விழுந்ததும் அவர் குழந்தையைப் போல விம்மி விம்மி அழுதார்.

சாவித்திரிக்குத் தூக்கி வாரிப் போட்டுவிட்டது. தன் தகப்பனார் அந்த

மாதிரி நிலைகுலைந்து கதறுவதை அவள் பார்த்ததே இல்லை. திடீரென்று அப்போது தான், அந்தச் சோகத்தின் முன்னிலையில் தன் சோகத்தின் அளவு தெரிந்தது அவளுக்கு. உடனே அவள் எல்லாவற்றையும் மறந்தாள்.

எழுந்தோடித் தகப்பனாருடைய முகத்தைப் பிடித்துக் கொண்டு கண்ணீரைத் துடைத்தாள்.

'அப்பா, நீங்கள் எது வேண்டுமானாலும் செய்யுங்கள், அப்பா; நான் என்ன செய்ய வேண்டும்? கையெழுத்துத் தானே போடவேண்டும்? போடுகிறேன் அப்பா! நீங்கள்–'

'சாவித்திரி–சாவித்திரி' என்றுதான் அவரால் சொல்ல முடிந்தது நெஞ்சடைப்பில்.

'அப்பா, இப்படியா உங்கள் சோகத்தை உள்ளே வைத்துக்கொண்டு...? வேண்டாம், வேண்டாம். அழாதேயுங்கள் அப்பா! என்னைப் பாருங்கள்!' என்று தன் துக்கத்தை மறந்து சாவித்திரி, தகப்பனார் துக்கத்தை மாற்ற முயன்றாள்.

●